# இந்தோ-ஆரியர்கள் ஏன் சமஸ்கிருதத்தை பின்னுக்குத்தள்ளினார்கள்.?

ஒரு பறவை தனக்கு ஆபத்து எனில் கத்தும். அதை alarm call என்றழைப்பர். அதுபோல் மனிதன் வாழ்வதற்கு சத்தம் மட்டுமே போதும். பின் ஏன் மொழியை வளர்த்தான்.? இயற்கையையும் மனிதனையும் ஆள்வதற்காகத்தான்.ஆளுமை என்ற ஒற்றைச்சொல் பத்தாயிரம் ஆண்டுகளை நகர்த்திவிடும். கடலுக்கடியில் நாம் பூம்புகாரை பார்த்ததுபோல் லெமூரியாவை காலம் ஒருநாள் கண்டறியும்.! அன்று தமிழ் இந்திய மொழிகளை ஆண்டிருக்கக்கூடும் என்பதை அறிய முடியும்.. மனிதன் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவனா.? அல்லது பூகோள அடிப்படையில் பல பகுதிகளில் பரிணமித்தவனா என்ற சர்ச்சை முடிவடையாது என்றாலும், மொழிகள் ஒரே காலத்தில் எழுதும் நிலையை எய்தவில்லை.

நாலாயிரம் வருடங்களுக்குமுன் எழுத்து நிலைக்கு வளராத சமஸ்கிருத மொழியிலான ரிக்வேத மந்திரங்களுடன் வந்த ஆரியர்கள் அன்றைக்கும், பிறகும் எழுத்துள்ள வடமொழிகளான நாகரி, பாலி, கிரந்தம், பிராகிருதம் ஆகியவற்றின் எழுத்துக்களையே பயன்படுத்திக்கொண்டதால் சமஸ்கிருதம் எழுத்தில்லா மொழியானது. இது பலவீனமல்ல.. பலமென்றதால்தான், சமஸ்கிருதம் தமிழை ஆயிரமாண்டுகளும் மற்ற இந்திய மொழிகளை பல ஆயிரமாண்டுகளும் அடிமைப்படுத்தி ஆளமுடிந்தது.

நானூறு வருடத்திற்கு முன் தங்கப்பூனூல் அணிந்து மதுரைக்கு வந்த ரோமன் கிறிஸ்தவ பாதிரியார் ஆரியர்களுக்கு ஆங்கிலத்தையும், பைபிளையும் கற்றுத்தந்தார். ஆரியர்களை கரெக்ட் பண்ணிவிட்டால் மொத்த இந்தியாவையும் கிறிஸ்தவராக்கிவிடலாம் என்ற ஐரோப்பியர்களின் திட்டம் பெரும் பொருள் செலவை ஏற்படுத்தியதேயொழிய இந்தியா கிறிஸ்தவ நாடகவில்லை. ஆனால் இலவச கல்விபெற்ற ஆரியர்கள் ஆங்கில மேதைகளானார்கள்.அடிமை இந்தியாவில் ஆங்கிலம் தன் ஆளுமைக்கு அவசியம் என்பதால் சமஸ்கிருதத்தை ஒருசில வைதீகர்கள் மட்டும் இனி கற்கட்டும் என சமஸ்கிருதத்தை பின்னுக்குத்தள்ளி வெள்ளைக்காரன் தரும் பதவியனைத்திலும் ஆங்கில மேதைகளான ஆரியர்கள் இடம் பிடித்தார்கள்.சுதந்திரத்திற்கு பின்பும் அரசின் அதிகார பீடமாக நிலைகொண்டிருப்பதை யாரும் மறுக்க முடியாது.

சரஸ்வதி, சுக்லா, காயஸ்தர், மித்ரா, பானர்ஜி, சட்டர்ஜி, பட்டாச்சார்யா, சாகு, நம்பூதிரி, அய்யர், அய்யங்கார் என ஐநூறுக்கும் மேற்பட்ட பிரிவுகளாக கறுப்பு-சிவப்பு-மஞ்சள்-வெள்ளை நிறங்களையுடைய இந்தோ-ஆரியர்களின் வாழ்ந்த தலைமுறைகளும், 130 கோடி இந்தியர்களில் ஐந்து சதவீதம் சுமார் ஆறரைக்கோடி வாழும் தலைமுறை களும் தமிழ், பாலி, இந்தி, ஒரியா, தெலுங்கு, மராட்டி..என தத்தம் தேசிய இனமொழி களையே பேசி வாழ்ந்தார்கள்..வாழ்கிறார்கள். சமஸ்கிருதத்தில் அம்மா என்று இவர்களின் எந்த ஒரு குழந்தையும் அழைத்ததுமில்லை.! வெள்ளை நிற ரிக்வேத ஆரியர்கள் பெண்ணோடு இந்தியாவிற்குள் படையெடுத்து வராததால் அவர்களது முதல் தலைமுறைக்கூட சமஸ்கிருதத்தில் பேசியிருப்பார்களா என்பது கேள்விக்குரியதாகும். எனவே ஐந்து லட்சம் கோடி செலவு வைக்கும் புதிய கல்விக்கொள்கை மூலம் மகிழ்வூட்டும் முறையில் கற்பிக்கபடவுள்ள சமஸ்கிருதம், “15 சதவீத இஸ்லாமியர்கள் தேசிய இன பிரிவின்றி வீட்டில் உருது பேசுவது போல” வீட்டில் பேசும்மொழியாக ஐந்து சதவீத இந்தோ-ஆரியர் குழந்தைகளிடமாவது துளிர்விடுமா.?

*-அருள்சந்,திருச்சி, 18-08-2020*